உ

கடவுள் துணை

தண்டி ஆசிரியர் இயற்றிய

# தண்டியலங்காரம்,

ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் உரையுடன்.




இஃது

...துரை ஜில்லா, சேம்பூர்...

...மத் வீ. ஆறுமுகம் சேர்வை

...வர்களால் பார்வையிடப்பெற்று, முன் உரையின்றி

...ருந்த சில மேற்கோட் செய்யுட்களுக்கும் உரை

எழுதிச் சேர்க்கப்பெற்றது.

---

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.

---

1920

விலை ரூபா 1-12-0

உ

# முகவுரை

'தண்டியலங்காரம்' என்பது, மூன்றும் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். இது, 'தண்டி யாசிரியராற் செய்யப்பட்ட அலங்காரத்தை யுணர்த்தும் நூல்' என விரியும். 'அலங்காரம்' என்பது தனியே, காரியவாகுபெயராய்த் தன்னை விளைவித்தற்குக் காரணமாகிய நூலை யுணர்த்தும். அலங்கார சாஸ்திரமானது, பாஷையின் அழகை விளக்கும் இயல்பினையுடையது. ஆதலின், இதற்கிப்பெயர் பொருந்துவதாயிற்று. இந்நூற் பழக்கமானது சாதுரியமாகப் பேசவும், ஓதவும் உபயோகமாவதன்றி, நாகரிக நடைக்கும், அஃதிலாத நடைக்கும் நியாயம் வகுத்துக் காட்டவும், வாக்கியங்களிலுள்ள குற்றங்களையும் நலங்களையும் ஆராய்ந்து எண்ணிய கருத்தை யுணரவும், அவ்வுணர்ச்சியால் சிறந்த நூல்களை இயற்றவும் உதவுவதாகும். அணியிழந்த பெண் எங்ஙனம் வனப்புறுளோ அங்ஙனமே அலங்காரமற்ற நூல் அழகிதன்றாம். ஆதலின், இது பாஷைக்குரிய இலக்கணங்களுள் முக்கியமானதாகக் கொள்ளப்படும். இஃதிங்ஙனஞ் சிறந்து நிற்றல்பற்றியே தமிழிலக்கண வரிசையிலும், இஃதின்றி மற்றைய சிறவாவென்பது தோன்ற, 'எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி' என இதனை எல்லாவற்றினு மேம்பாடுற முடிவில் வைத்துளார் ஆன்றோர். இஃதன்றியும் எழுத்திலக்கணம் முதலியவை அந்தந்தப் பாஷைக்கே உரியவைகளா யிருப்பதுபோலன்றி இவ்வணியிலக்கணம் பெரும்பான்மையும் பல பாஷைகளுக்கும் பொதுவாயிருக்கும் பெருமையும் பெற்றுளது. இதுபற்றி இதற்குப் பலரும் அதிகாரிகளாவர். இன்னும் இவ்வலங்கார சாஸ்திரமானது, அக்கினி புராணத்துங் காணப்படுதலால்

மிகப் பழமையானதுமாம். இவ்வலங்கார விலக்கணம் யத்தில் தர்க்கம், வியாகரணம் முதலிய சாஸ்திர போலவே பற்பல நூல்களாற் பல்வேறு வகைகளாக ரிக்கப்பட்டு சமுத்திரம்போலப் பரப்புடைத்தா யிரு றது. வடமொழியில்: வாமனகாரிகை, பாமஹசூத்ரம், யதர்சம், ஸாஸ்வதீ கண்டாபரணம், சிருங்காரதி காவ்யப்ரகாசம், அலங்கார ஸர்வஸ்வம், ரஸதரங்கிணி, மஞ்சரி, தொனி, லோசனம், சாஹித்ய சிந்தாமணி, ச த்ய சூடாமணி, சாஹித்யதர்ப்பணம், சாஹித்யரத்நாக சமற்காரசந்திரிகை, பிரதாபருத்ரயசோபூஷணம், சந் லோகம், குவலயானந்தம், சித்ரமீமாம்சை, அலங்கார க துபம், ரஸகங்காதரம், ஏகாவலி, காவ்யதர்ப்பணம் முத வைகளும், அவற்றின் உரைகளும் இவ்வலங்கார விலக் த்தை விரிவாகக் கூறுவனவாம். இவற்றுள் பிராசீநம், நம் என்று இரண்டு வகையுண்டு. வாமனகாரிகை முத னவை பிராசீநம் (பழையவழி பற்றியன); காவ்யப்பிரக முதலானவை நவீநம் (புதியவழிபற்றியன). இவ்விரண்டி கொள்கைகளிலும் விசேஷ வித்தியாசங்களுண்டு. அன் யும் அந்தந்த நூல்களிலும் ஒன்றிற்கொன்று சிறிது வித் யாசங் காணப்படும். இவற்றுள் காவ்யாதர்சம் என்ப ஆசார்ய தண்டியென்று சிறப்பித்துக் கூறப்படும் தண் யென்னும் ஆசிரியரால் இலக்கணம், உதாரணம், பொரு தல் முதலிய விசேஷங்களோடு சுலோகரூபமாக நெடு காலத்துக்குமுன் செய்யப்பட்டது.

இந்த காவ்யாதர்சம் என்னும் வடநூலின் மொ பெயர்ப்பே இத் தண்டியலங்காரமாம். இந்நூல் எழுத் சொல், பொருள், யாப்பு, அணியென்னும் ஐந்திலக்கணங் ளுள் அணியிலக்கணத்தை மாத்திரம் தனியே உணர்த்து தாய், பொதுவியல், பொருளணியியல், சொல்லணியிய என்னும் மூன்றியல்களையும், கஉ௬-சூத்திரங்களையு முடை பது. இது வடமொழித் தண்டியாசிரியர் செய்த நூலி மொழிபெயர்ப்பாதல்பற்றியே இதற்குக் தண்டியலங்கா

மென்னும் பெயர் வழங்கலாயிற்று. இன்னும் இதற்கு: அணியியல், அணிபதிகாரம், அணியிலக்கணம் என மறு பெயர்களு முண்டு. இது, சிலப்பதிகார வுரையாசிரியராகிய அடியார்க்கு நல்லாராலும், இலக்கணவிளக்கக்காரராகிய திருவாரூர் வைத்தியநாத தேசிகராலும் எடுத்தாளப்பட்ட பெருமையுடையது. தமிழில் அணியிலக்கணத்தை மாத்திரம் விரித்துணர்த்தும் பழைய தமிழ் நூல் இத் தண்டியலங்கார மொன்றே; இதற்கு முந்தியதான தொல்காப்பியமும் பிந்தியதான இலக்கணவிளக்கமும், இடைப்பட்டதான வீரசோழியமும் இவ் விலக்கணத்தைக் கூறுவனவேனும், ஐவகை யிலக்கணத்தையும் ஒருங்கே யுணர்த்துவன வாதலின், இதைப்போல் அணியிலக்கணத்தைத் தனியாக விசேஷித்துக் கூறுவனவல்ல.

அணிகளைச் சுருக்கிச் சிலவற்றில் அடக்கிவிடுதல் பிராசீனர் கொள்கையும், பலவாறாக விகற்பித்து விரிப்பது நவீனரின் கொள்கையுமாதலின் இந்நூலில், ௩௫ - அணிகளே காட்டப்பட்டுள்ளன. மாறனலங்காரத்தில் ௬௪-உண்டு. சந்த்ராலோக மென்னும் வடநூலில், ௧௦௦-கூறப்பட்டுள்ளன. சுமார் தொண்ணூறு வருஷங்களுக்கு முன்னிருந்த திருத்தணிகை விசாகப்பெருமாளையர் செய்த இலக்கணச் சுருக்க வினுவிடையிலும், பாலபோத இலக்கணத்திலும் இந்த சந்த்ராலோகத்தின் மொழிபெயர்ப்பாகவே அவர் நூறு அணிகளை வகுத்திருக்கின்றனர். சந்த்ராலோகத்தின் விவரணமாக அமைந்த குவலயாநந்தத்தில் நூற்றுக்கு மேற்பட்ட அணிகள் உண்டு.

இத்தகைய தண்டியலங்காரத்தைத் தமிழிற் செய்த ஆசிரியரின் பெயர், இடம், காலம், மதம் முதலியவைகளில், ஒன்றேனும் நிச்சயமாகத் தெரியவில்லை. இவருடைய விருத்தாந்தத்தைச் சிற்சிலர் சிற்சிலவிதமாகக் கூறுவர்:

"வடதிசை யிருந்து தென்மலைக் கேகி
மதிதவழ் குடுமிப் பொதிய மால்வரை

இருந்தவன் றன்பா லருந்தமி ழுணர்ந்த
பன்னிரு புலவரின் முன்னவன் பகர்ந்த
தொல்காப் பியநெறி பல்காப் பியத்தும்
அணிபெறு மிலக்கண மரிதினிற் றெரிந்து
வடநூல் வழிமுறை மரபினின் வழாது
ஈரிரண் டெல்லையி னிகவா மும்மைப்
பாரத விலக்கணம் பண்புறத் தழீஇத்
திருந்திய மணிமுடிச் செம்பிய னவையத்து
அரும்பொருள் யாப்பின் வகுத்தனன்
ஆடக மன்றத்து நாடக நவிற்றும்
வடநூ லுணர்ந்த தமிழ்நூற் புலவன்
பூவிரி தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரிய லம்பி காபதி
மேவருந் தவத்தினிற் பயந்த
தாவருஞ் சீர்த்தித் தண்டியென் பவனே"

என வழங்கிவரும் ஒரு சிறப்புப்பாயிரச் செய்யுளை ஆதாரமாகக் கொண்டு, வடநூலாசிரியர்போலவே இத் தமிழ் நூலாசிரியரும் தண்டியென்னும் பெயருடையா ரென்றும், அம்பிகாபதி யென்பவரின் குமாரரென்றும், கம்பர் பௌத்திர ரென்றும், சோழநாட்டின ரென்றும், வடமொழி தென்மொழிப் பயிற்சியுடையா ரென்றும், இந் நூல் சோழ னவைக்களத்தில் அரங்கேற்றப்பட்டதென்றும் சிலர் கூறுவர். அதனால், 'எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின்மேல்' என்ற செய்யுளால் வரையறுக்கப்பட்டிருக்கும் கம்பருடைய காலத்தைக்கொண்டு இந்நூலாசிரியர் காலம் இற்றைக்கு ஆயிரம் வருஷங்களுக்கு முன்பாகலா மென்றும், இந்நூலின் உதாரணச் செய்யுட்கள் சிலவற்றில் அநபாயசோழன் புகழ் காணப்படுதல் கொண்டு இந்நூல் அச்சோழன் காலத்ததென்றும் ஊகிக்கலாம். சிலர் ஒரு தண்டியே வடமொழி தென்மொழி யிரண்டிலும் வல்லுநராய் உபய கவியெனப் பெயர் வழங்கப்பட்டு இருந்தன ரென்றும், அவரே வடமொழி காவ்யாதர்சத்தையும், தமி

ழ்த் தண்டியலங்காரத்தையும் இயற்றியவரென்றும் கூறுவர். இவ்விரண்டனுள், முன்னதிலுள்ள பாயிரச்செய்யுள் பல ஏட்டுப் பிரதிகளினும் பழைய அச்சுப் புத்தகங்களினும் காணப்படாமையால் அது நிச்சயமாகத் துணியப்படுவதன்றும். பின்னதற்கும் தக்க ஆதாரங்க ளின்மையால் அதிலும் ஐயமே. திருக்குருகூர்ச் சுப்பிரமணிய தீக்ஷிதர், தாம் செய்த பிரயோகவிவேகமென்னும் நூலில், வடநூலாசிரியரை ஓரிடத்தில் ஆசாரிய தண்டிகளென்றும், மற்றோரிடத்தில் தண்டியாசிரிய ரென்றும் கூறினார்போலவே, தமிழ் நூலாசிரியரையும் தண்டியாசிரிய ரென்றும் பலவிடங்களினும் கூறியிருத்தலின் இத்தமிழ் நூலாசிரியர்க்குத் தண்டியென்னும் பெயர் உண்டென்பது மாத்திரம் ஒருவாறு துணியப்படும்; இப்பெயர், இயற்பெயராகவோ, அல்லது, தண்டி செய்த வடநூலை மொழிபெயர்த்ததனால் வந்த புகழ்ப்பெயராகவோ கொள்ளப்படும். எனினும், இவ்விஷயத்திலும் ஐயம் நிகழ்கின்றது. எங்ஙனமெனில், அகஸ்தியர், கொங்கணர், தேரையர்முதலிய பண்டைக்கால முனிவர்களால் ஏற்படுத்தப்பட்ட வைத்தியமுறை, ஞானம் முதலிய விஷயங்களை எடுத்துப் பிற்பட்ட காலத்தவரால் செய்யுட்களாகப் பாடப்பெற்ற நூல்களுக்கு அகஸ்தியர் செந்தூரவைப்பு, போகர் ஞானம், கொங்கணர் வாதகாவியம், தேரையர் தைலவர்க்கம் என அப் பெரியோர் நாமங்களின் முதற்குறிப்பாகவே பெயர்கள் வழங்கப்படுதல்போல, பெயர் தெரியாத ஒருவரால் வடமொழித் தண்டியாசிரியர் செய்த அலங்கார சாஸ்திரத்தை மொழிபெயர்த்து இந்நூல் செய்யப்பட்டு இதற்கு அவ் வடமொழியாசிரியர் பெயரே முதற்குறிப்பாக வந்திருக்கலாம். இந்நூலாசிரியர் ஊர், பெயர் முதலியவைகளைப்பற்றிய ஆராய்ச்சிகள் எவ்வாறாயினும், இந்நூல் மிகச் சிறப்புற்ற தென்பதும், இதனைச் செய்தவர், வடமொழியிலுந் தென்மொழியிலும் வல்லுநரென்பதும், மறுக்கக்கூடாத விஷயங்களாம்.

இந்நூலின் உரை, சூத்திரப் பொருளை நன்கு விளக்கிக் காட்டுவதோடு, அச்சூத்திரங்களிற் காணப்படும் அணி விகற்பங்களின் இலக்கணத்தையும் சுருக்கமாக எடுத்துக் காட்டி உதாரணச் செய்யுட்களின் பொருள்களையும் பெரும் பான்மையும் விளக்கி, சிற்சிலவிடங்களில் ஆக்ஷேப சமாதானங்களைக் கூறுவதுடன் முதனூற் கருத்தையுந் தழுவியுள்ளது. இவ்வுரையில் வரும் உதாரணச் செய்யுட்களிற் பல, வடநூலின் மொழிபெயர்ப்பாக அமைந்தவை; சில, அவற்றோடொத்த கருத்துடையவை; சில ஒவ்வாத கருத்துடையனவெனினும் தகுதிபற்றிப் பிற நூல்களினின்று எடுத்தாளப்பட்டவை. இவ்வுதாரணச் செய்யுட்களைத் தண்டியலங்கார நூலாசிரியரே சேர்த்தமைத்திருக்கின்றனர் இது, பிரயோகவிவேக நூலார், "தண்டியாசிரியர் மூலோதாரணமுங் காட்டினாற்போல, யாமும் உரையெழுதியதல்லது மூலோதாரணமுங் காட்டினோம்" என்று எழுதியிருத்தலால் உணரப்படும். இவ்வுதாரணச் செய்யுட்களிற் சில: வீரசோழியம் அலங்காரப்படலத்தின் உரையிலும், சில: தொல்காப்பியம் நச்சினார்க்கினிய ருரையிலும், சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லாருரையிலும் காணப்படும். இங்குக் கூறிய இந்நூலுரையை இயற்றியவருடைய விருத்தாந்தமும் விளக்கமாகத் தெரியவில்லை. இந்நூலின் பழைய அச்சுப்பிரதியில், 'சுப்பிரமணிய தேசிகராற் செய்யப்பட்ட உரை' என்பது மாத்திரம் காணப்படுகின்றது; இவ்வுரையில், அணியின் இலக்கணத்திற்கும், அதற்கு இலக்கியமாகக் காட்டிய உதாரணச் செய்யுட்களுக்கும் உள்ள பொருத்தமும், சில உதாரணச் செய்யுட்களுக்கு உரையும் சிற்சில விடங்களில் நன்கு விளக்கிக்காட்டப் படவில்லை. இவை அறிவுடையோர்க்கெளிதிற்புலப்படக் கூடியவை யென்று இவையிற்றை உரையாசிரியர் விடுத்தனர். இவ்வுரையுடனே, ஸ்ரீமுகவருஷத்தில், தில்லையம் பூர்ச் சந்திரசேகர கவிராஜ பண்டிதாாற் பரிசோதிக்கப் பட்ட பிரதிக்கிணங்க இந்நூற்பிரசுரம் என்று அச்சிடப்பட்

டிருக்கின்றது. வேறு சில அச்சுப்பிரதிகளும் வெளியாகி யிருக்கின்றன. ஆனால் இவைகள், மேற்கூறிய சில உதாரணச் செய்யுட்களின் உரை முதலிய விளக்கங்கள் இல்லாத குறைவுபாட்டுடனே, நெடுங்காலத்துக்கு முன் அச்சிடப்பட்டவை யாதலின், உரை, உதாரணச் செய்யுள் முதலியன தனித்தனி பிரித்துக் காட்டப்படாமல் ஒன்றாக விருத்தி வசனம்போல அடுக்கப்பட் டிருத்தலினாலே இக்காலத்து வித்தியார்த்திகளுக்கு இந்நூலைப் பயின்றுணரும் விஷயத்தில் இடர்ப்பாடுறுகின்றது. இவ்விடர்ப்பாட்டை நீக்கும் வண்ணம் 46 வருஷங்களுக்கு முன் சென்னைச் சர்வகலாசாலைத் தமிழ்ப் பிரதம பண்டிதராகிய-பிர்மஸ்ரீ. தி. ஈ. ஸ்ரீநிவாசராகவாசாரிய ரவர்கள் 'தண்டியலங்காரசாரம்' என ஒரு நூலியற்றி அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றார்கள். அதற்குப் பின் திருவல்லிக்கேணி, பிரமஸ்ரீ. வை. மு. சடகோபராமாநுஜாசாரியாரவர்கள், பழைய ஏட்டுச் சுவடிகளையும், அச்சுப் பிரதிகளையும் ஆராய்ந்து புதிய உரைகளுடனும் குறிப்புக்களுடனும் தண்டியலங்காரத்தை விளக்கமாக அச்சிட்டு வெளிப்படுத்தியிருக்கின்றார்கள். தண்டியலங்கார சாரமோ மிகச் சுருக்கமாகவுள்ளது. பின்னது விளக்கமுடையதாயினும் பொதுவியல், பொருளணியியல் என்னும் இரண்டியல்களைமட்டு முடையது.

ஆதலின் தண்டியலங்கார முழுவதையுமே விளக்கமாக நல்ல விதத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தவேண்டுமென்பது சில விவேகிகளின் விருப்பம். அவ்விருப்பத்திற்கிணங்கி, சூத்திரங்களையும், சூத்திரப் பொருள்களையும், உதாரணச் செய்யுட்களையும், அவற்றின் உரைகளையும் வெவ்வேறாகப் பிரித்தும், தலைப்பெயரில்லாத விடங்களில் தலைப்பெயர் கொடுத்தும், உரை யெழுதப்படாத உதாரணச் செய்யுட்களுக்கு உரை யெழுதியும், இலக்கணத்துக்கும் உதாரணச் செய்யுட்களுக்கு முள்ள பொருத்தத்தை விளக்கியும், அரும்பதங்கட்குப் பொருள் எழுதியும், வேறு சில குறிப்புக்களும் காட்டியும் இந்நூல் இப்பொ

ழுது எம்மால் வெளிப்படுத்தலாயிற்று. இதில் 96-பக்கங்கள் வரை உரையின்றி விடப்பட்ட உதாரணச் செய்யுட்களின் உரைகளும், விளக்கங்களும், சென்னைப் பச்சையப்பன் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ கா. ர. கோவிந்தராஜ முதலியாரவர்களால் எழுதப்பட்டவை. 97-ம் பக்கத்திலிருந்து முடிவுவரை உரையில்லாத உதாரணச் செய்யுட்களின் உரைகளும், குறிப்புக்களும், அநுபந்தமும் என்னால் எழுதப்பெற்றவை.

இதில் விடுபட்ட உதாரணச் செய்யுட்களின் உரை முதலியவற்றை ஏதோ ஒருவாறு என்புத்திக்கெட்டியவரை முன்னோர் நூலின் வழிபற்றி நான் விளக்கிக்காட்டினேனேயன்றி முழுதும் விளக்கிக் காட்டிலன்; அத்தகைய ஆற்றலும் என்பா லமைந்திலது. ஆதலின், என் அறியாமையாலும் வேறு சில காரணங்களாலும் சில தவறுகளும் இதிற் காணப்படலாம். ஆதலின், அறிஞர் என் அரும் பிரயாசையா லமைந்த நலங்கண்டவரையில் திருப்தியடைந்து, தவறு காணப்படின் வெறுக்காது அதனை எனக்கறிவித்து என்னால் திருத்துவித்துக்கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

இங்ஙனம்,

☞ S. V. ஆறுமுகன்.



# தண்டியலங்கார

## மேற்கோள் செய்யுள் முதற்குறிப்பகராதி



தண்டியலங்கார

மேற்கோள் செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

---

உ

தண்டியலங்கார

# விஷயசூசிகை

## 1-வது, பொதுவியல்

## 2-வது, பொருளணியியல்

பக்கம்

## 3-வது, சொல்லணியியல்

பக்கம்

தண்டியலங்கார விஷய சூசிகை முற்றிற்று.

---

## தண்டியலங்கார

# விஷய அகராதி

(அகராதி வரிசை)

தண்டியலங்கார விஷய அகராதி முற்றிற்று.

---

ரிப்பன் புஸ்தகசாலை, 87, தம்புசெட்டி வீதி, சென்னை.

துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

## திருவெங்கைக்கோவை மூலமும் உரையும்.

உயர்ந்த கிலிட்டு பயிண்டு: விலை ரூபா 2-8-0

அகப்பொருளிலக்கணத்துக்கோர் இலக்கியமாக விளங்கும் கோவை நூல் நமது தமிழ்மொழிக்கே சிறப்புநூலாம். ஓரின மணிகளை ஒழுங்குபடக் கோத்தல்போல, அகப்பொருட் கிளவிகளை ஒழுங்குபடக் கோத்தலின், இந்நூல் கோவை யெனப்பட்டது.

இக் கோவைநூல், களவு கற்பென்னும் இரண்டியல்களில், இருபத்தாறு கிளவிக் கொத்துக்களான், நானூறு துறைகளைக் கொண்டு இயலுகின்றது. இந்நூலுள், பண்டைய தமிழ்மக்களின் கூட்டுறவும், நடையுடை பாவனைகளும், நாகரீகங்களும், ஆடவர் மகளிரிடத்துக் கொண்ட நட்பும், பெண்டிர் ஆடவரிடத்துக்கொண்ட அன்பும், இன்ன பிறவும் இனிது விளங்கும்.

இத் திருவெங்கைக்கோவை துறைமங்கலம் சிவப்பிரகாச முனிவர் திருவாய்மலர்ந்தருளியது. தமிழ்த்துறையி லிறங்கும் மாணவர்க்கும், தமிழ்க்கடலுள் படிந்து திளைத்து முழுகும் புலவர்க்கும் பெரும்பேறாக விளங்க அம்முனிவர் இயற்றியருளிய தமிழ்நூல்களின் சிறப்புக்கள் அவற்றை ஐயமறக் கற்று மகிழ்நரேயன்றி, மற்றையோர் அறியற்பாலனவன்றாம். நம் முனிவர்பெருமான் இந்நூலுள் திருக்குறளின் கருத்துக்களும், அடைவுகளும், தருக்கவமைதிகளும், உலகியல் வழக்குக்களும், சங்கநூற்பெயர் முறைகளும் அகப்பட அழகுபெற யாத்திருக்குஞ் சிறப்புச் செப்புந் திறத்ததன்றாகும். துறைப்பொருட்குத் தகப்பாட்டுடைத் தலைவனது சீர்த்தியைத் தொகுத்துக் கூறும் ஒற்றுமை இவ்வெங்கைக்கோவை ஒன்றினே காணக்கிடைப்பதாம்.

---

கல்லாடனார் இயற்றிய

## கல்லாடம் மூலமும் உரையும்

உயர்ந்த கிலிட்டு பயிண்டு: விலை ரூபா 3

பண்டைய தமிழ் நூல்களில் 'கல்லாடம்' என்னும் அரிய நூலும் ஒன்றாம். இது கல்லாடனார் இயற்றியது. கல்லாடர் கடைச்சங்கத்துப்புலவர் நாற்பத்தொன்பதின்மரில் ஒருவர். இவரது சிறப்புக் கவி திருவள்ளுவ மாலையின்கண் ஒன்பதாவதாக நிலவுகின்றது. இந்நூல் திருக்கோவையாருள் ஆங்காங்கு ஒவ்வொன்றாக நூறு செய்யுட்களைத் திரட்டி, ஒவ்வொன்றன் கருத்து ஒவ்வொன்றினுகப் பெரிதும் சிறிதுமாய் ஒரு நூறு அகவற்பாக்களால் யாக்கப்பட்டது.

கல்லாடம் என்பது ஒரு திருப்பதி. அதனை, 'கல்லாடத்துக் கலந்தினிதிருந்து' என்னும் மணிவாசகர் திருவாக்குத் தெளிவிக்கும். ஆகவே, கல்லாடனார் அப்பதியின்கண் வதிந்தவர் என்னலாம். இவரே சங்ககாலத்தவர் எனக் கொள்ளின், பின்னவர் அவர் பெயரையே தாம் மேற்கொண்டிருந்தனர் என ஊகிக்கலாம். இவ்விரண்டாம் கல்லாடரே இந்நூலினை யாத்தனரென்பது தெள்ளிதிற் புலனாகும்.

ஸ்ரீ

# தண்டியலங்காரம்

## மூலமும் உரையும்

முதலாவது

# பொதுவியல்

### தற்சிறப்புப் பாயிரம்

1. சொல்லின் கிழத்தி மெல்லிய லிணையடி
சிந்தைவைத் தியம்புவல் செய்யுட் கணியே.

என்பது, சூத்திரம்.

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ வெனின், அணியினது இலக்கணம் உணர்த்தினமையான், அணியதிகாரம் என்னும் பெயர்த்து.

இவ்வதிகாரத்தின் முதற்கண் ஒத்து என்ன பெயர்த்தோ வெனின், ஒருசார் அணிபெறுஞ் செய்யுட்கும் ஒருசார் அணிக்கும் இலக்கணம் உணர்த்தினமையான், பொதுவியல் என்னும் பெயர்த்து.

இவ்வோத்தினுள் இத்தலைச் சூத்திரம் என்நுதலிற்றோ வெனின்; தெய்வ வணக்கமும், உரைக்கும் பொருளும் உணர்த்துதல் நுதலிற்று.

(இதன் பொருள்.) கலைமடந்தை துணைத்தாளைக் கருத்துள் வைத்து, யாப்புக்கு அலங்காரவிலக்கணஞ் சொல்லுவேன்.

(விசேஷவுரை.) சொல்லின்கிழத்தி யெனினும், கலைமடந்தை யெனினும் ஒக்கும். இணையடியெனினும், துணைத்தாளெனினும் ஒக்கும். சிந்தை யெனினும் கருத்தெனினும் ஒக்கும். 'உள்' என்பது ஏழாம்வேற்றுமை தொக்குநின்று விரித்து உரைக்கப்பட்டது. இயம்புவலெனினும், சொல்லுவேனெனினும் ஒக்கும். செய்யுளெனினும், யாப்பெனினும் ஒக்கும். அணியெனினும், அலங்கார

மெனினும் ஒக்கும். 'அணி' என்றது ஈண்டு அலங்காரவிலக்கண த்தை; ஆகுபெயர். ஏகாரம் - ஈற்றசை.

"வாழ்த்து, தெய்வம் வணங்குதல், வருபொருள் மொழிதல் என் பன காப்பியத்து முதலிலக்கணம்" என்றூ ராசிரிய ராகலின், ஈண் டுத் தெய்வவணக்கமும், உரைக்கும் பொருளும் உணர்த்தப்பட்டன. இஃது இலக்கியத்திற்கு ஓதியவதனை இலக்கணத்திற்கும் ஓதி உடம் பொடுபுணர்த்தா ராசிரிய ராகலின், ஈண்டு இவ்வாறு உரைக்கப்பட் டது. * என்றதனுல் சிறப்புப்பாயிர மாயிற்று. (க)

---

# நூல்

## I. செய்யுள் வகை

**2.** செய்யு ளென்பவை தெரிவுற விரிப்பின்
முத்தகங் குளகந் தொகைதொடர் நிலையென
வெத்திறத் தனவு மீரிரண் டாகும்.

என்பது, மேல் 'செய்யுட்கு அணியிலக்கண முணர்த்துவல்' என்ருர்; ஈண்டு, அச்செய்யுளாமாறு உணர்ந்தே அணி உணரப்படு மாகலான், அவ்வணி பெறுஞ் செய்யுளினது பெயரும், முறையும், தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யுளென்று சொல்லப்படுவன, விளங்க விரித்து உணர்த்துங்கால், எவ்வகைப்பட்ட பாவேனும் முத்தகச்செய்யுளும், குளகச்செய்யுளும், தொகைநிலைச்செய்யுளும், தொடர்நிலைச் செய்யு ளும் என நான்கு வகைப்படும்.

(வி - ரை.) 'செய்யுள்' என்பதனை நான்கினேடும், 'நிலை' என் பதனைப் பின்னிரண்டனேடுங் கூட்டி யுரைக்கப்பட்டன.

முத்தகம், குளகம் என்பன வடமொழிப்பெயர். ஏனை யிரண் டும் தமிழ் மொழிப்பெயர்.

அவையாமாறு முன்னர் அறியப்படும். (உ)

### முத்தகச் செய்யுள்

**3.** அவற்றுள்,
முத்தகச் செய்யு டனிநின்று முடியும்.

---

* "தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொருளும்
எய்த வுரைப்பது தற்சிறப் பாகும்."

என்றபடி இத்தலைச் சூத்திரம் தற்சிறப்புப் பாயிரமாகும்.

என்பது, முத்தகச் செய்யுளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்சொன்ன நான்கனுள் முத்தகச் செய்யுளென்பது, தனியே நின்று ஒருபொருள் பயந்து முற்றுப்பெறுவது.

நேரிசை வெண்பா.

அது, "என்னேய் சிலமடவா ரெய்தற் கெளியவோ
பொன்னே! யனபாயன் பொன்னெடுந்தோண்-முன்னே
தனவேயென் றாளுஞ் சயமடந்தை தோளாம்
புனவேய் மிடைந்த பொருப்பு." என வரும்

(இ - ள்.) பொன்னை யொப்பாய்! அடிப்படத் தனக்கே சொம்மாக நினைத்துத் துய்க்கின்ற கொற்றவையுடைய தோள்களாகிய செறிந்த வேயினாலே நெருங்கப்பட்ட பொருப்பாகிய அனபாயனுடைய அழகினையுடையவாய்ப் பெரியவாகிய தோள்களானவை, என்னை யொக்குந் தன்மையராகிய பெண்டிர் பலரும் புல்லுதற்கு எளிவந்தனவாமோ? (ஆகா).

(வி-ரை.) வேய்மிடைந்த பொருப்பாகிய தோள் எனக் கூட்டுக. தோளாகிய பொருப்பு என்பாருமுளர் 'என்னேய்' என்புழி, இரண்டனுருபு தொக்கு நின்றதெனக் கொள்க. 'என்' என்பதனை இரக்கத்தின்கட்குறிப்பு என்பாருமுளர். 'சில' என்றது பல. எய்துதல்-கூடுதல் அநபாயன்-அபாயமிலாதன். பொன்-அழகு. நெடுந்தோள்-பெரிய தோள். 'என்று' என்றது, என்று நினைத்து என்றவாறு. சயமடந்தை-வனதுர்க்கை. புனவேய் - செழித்தவேய். மிடைதல்-நெருங்குதல். பொருப்பு-மலை. (௩)

## குளகச் செய்யுள்

4. குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்.

என்பது, குளகச் செய்யுளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குளகச்செய்யுளென்பது, பலபாட்டாய் ஒருவினை கொண்டு முடிவது.

(வி-ரை.) 'ஒருவினை' என்ற விதப்பான், ஒருபெயர் கொண்டும் முற்றுப்பெறு மென்க. இதற்கு இலக்கியம் வந்துழிக் காண்க ()

## தொகைநிலைச் செய்யுள்

5. தொகைநிலைச் செய்யு டோன்றக் கூறி
னொருவ னுரைத்தவும் பல்லோர் பகர்ந்தவும்
பொருளிடங் காலந் தொழிலென நான்கினும்
பாட்டினு மளவினுங் கூட்டிய வாகும்.

என்பது, தொகைநிலைச் செய்யுளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தொகைநிலைச்செய்யு ளென்பதனை விளங்கச் சொல்லின், ஒருவனால் உரைக்கப்பட்டுப் பலபாட்டாய் வருவனவும், பலரா லுரைக்கப்பட்டுப் பலபாட்டாய் வருவனவுமாய், பொருளால் தொகுத்தனவும், இடத்தால் தொகுத்தனவும், காலத்தால் தொகுத்தனவும், தொழிலால் தொகுத்தனவும், பாட்டால் தொகுத்தனவும், அளவால் தொகுத்தனவுமாம்.

(வி-ரை.) அவற்றுள், ஒருவனு லுரைக்கப்பட்டது-திருவள்ளுவப்பயன். பலரா லுரைக்கப்பட்டது-நெடுந்தொகை; இஃது, எல்லாத் தொகைக்கும் பொதுவிலக்கணம். பொருளால் தொகுத்தது-புறநானூறு. இடத்தால் தொகுத்தது-களவழி நாற்பது. காலத்தால் தொகுத்தது கார் நாற்பது. தொழிலால் தொகுத்தது - ஐந்திணை. பாட்டால் தொகுத்தது - கலித்தொகை. அளவால் தொகுத்தது-குறுந்தொகை. இவை சிறப்பிலக்கணம்.

இனி, 'கூட்டிய' என்ற விதப்பான், இவ் வறுவகையானுமன்றிப் பிறவாற்றால் தொகுத்தன உளவாயினும் அறிந்துகொள்க. (ரு)

## தொடர்நிலைச் செய்யுள்

6. பொருளினுஞ் சொல்லினு மிருவகை தொடர்நிலை.

என்பது, தொடர்நிலைச் செய்யுளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பொருளினால் தொடர்தலும், சொல்லினால் தொடர்தலும் என இருவகைப்படும், தொடர்நிலைச் செய்யுள்.

(வி-ரை.) எனவே, பொருட்டொடர்நிலைச் செய்யுளும், சொற்றொடர்நிலைச் செய்யுளும் என இருவகைப்படும்.

'இரண்டு' என்னாது 'வகை' என்ற மிகையான், மூன்றாவது பொருளினாலுஞ் சொல்லினாலுந் தொடர்வதும் உண்டெனக் கொள்க. (சு)

## பொருட்டொடர்நிலைச் செய்யுளின் பகுப்பு

7. பெருங்காப் பியமே காப்பிய மென்றாங்
கிரண்டா யியலும் பொருட்டொடர் நிலையே.

என்பது, அவற்றுட் பொருட்டொடர்நிலைச் செய்யுளைப் பகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெருங்காப்பியம் காப்பியம் என இரண்டுவகையாய் நடக்கும், பொருட்டொடர்நிலைச் செய்யுள்.

(வி-ரை.) 'பெருங்காப்பியம்' என்று ஆசிரியர் அடைசொற் புணர்த்தமையான், காப்பியமென்பது சிறிதெனப் பெறப்பட்டது. இஃது, உய்த்துக்கொண்டுணர்தலென்பது; இதனைச் சிறுகாப்பிய மெனினும் இழுக்காது. அல்லதூஉம், '"எடுத்தமொழி யினஞ்செப் பலு முரித்தே" எனக் கொள்க' என்றூர்க்குச் செப்பாமையும் உரித் தென்று கொள்ளாமோ வெனின், ஒன்றே இனமாயக்காற் கோட லும், பல இனமாயக்காற் கொள்ளாமையுமா மாதலான், ஆண்டே கூறினுரென்பது. அஃதேல், "இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை" என்னுமோ வெனின், அவை செய்யுட்கே யுரி யன சில சொல்லுதல்வகை; இஃது அன்னதன்றெனபது.

அஃதேல், கவியாற் பாடப்படுவனவெல்லாம் காப்பியமன்றோ? பொருட்டொடர்நிலையைக் காப்பியமென்றது என்னை? எனின், சேற்றுள் தோன்றியவெல்லாம் பங்கயமெனப் பெயர் பெறுமாயி னும் அப்பெயர் தாமரை யொன்றன்மேற்றே யாயினவாறுபோல இப்பெயர் பொருட்டொடர்நிலைக்கே யாயிற்று. ஒழிந்தனவும் ஒழி ந்த தமக்கு ஏற்றபெயர் பெற்றனவெனக் கொள்க.

'இரண்டு' என்னாது 'இயலும்' என்ற மிகையால், பத்துவகைப் பட்ட நாடகச்சாதியும், கோவையும் பொருட்டொடர்நிலைப்பாற்படு மெனக் கொள்க. பத்துவகைப்பட்ட நாடகச் சாதியாவன - * நாட கம், பிரகரணம், பாணம், பிரகசநம், டிமம், வியாயோகம், சமவா காரம், வீதி, அங்கம், ஈகாமிருகம் என இவை. கோவையாவன - தமிழ்முத்தரையர்கோவை முதலாயின. அல்லதூஉம், அவ்விலே சானே, முற்கூறிய முத்தகமுதல் மூன்றும் பின்னர்க் கூறிய பொருட்டொடர்நிலைச் செய்யுட்கு உறுப்பாய் வருதலு முடைய வெனக் கொள்க. (எ)

## பெருங்காப்பியம்

8. அவற்றுள்,
பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினென்

* 'வாரம், ஈயாமிருகம், அரட்டு, சமவகாரம், பாணம், வீதி, சல்லாபம், உத்திரட்டாங்கம், வீராசனம், வியாயோகம் என இவை, என்று சில ஏட்டுப்பிரதிகளி லிருக்கின்றது.

ஏற்புடைத் தாகி முன்வர வியன்று
நாற்பொருள் பயக்கு நடைநெறித் தாகித்
தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்
மலைகட ணாடு வளநகர் பருவ
மிருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து
நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழி னுகர்தல் புனல்விளை யாட
றேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்
றின்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரந் தூது செலவிகல் வென்றி
சந்தியிற் றொடர்ந்து சருக்க மிலம்பகம்
பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் * பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப.

என்பது, பெருங்காப்பியமென்னும் பொருட்டொடர்நிலைச் செய்யுளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) 'பெருங்காப்பியநிலை பேசுங்காலை' என்றது-பெருங் காப்பியத்தின் இலக்கணத்தைச் சொல்லுமிடத்து என்றவாறு.

'வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றின் ஒன்று ஏற்பு உடைத்து ஆகி முன் வர இயன்று' என்றது-வாழ்த்துதல் தெய்வம் வணங்குதல் உரைக்கும் பொருளுணர்த்தல் என்னும் மூன்றனுட் பொருந்துவதாக ஒன்று முன் வர நடந்து என்றவாறு.

'ஏற்புடைத்தாகி' என்றதனுன், அவற்றுள் ஒன்றேயன்றி இரண்டும் மூன்றும் ஒருங்கு வரினும் இழுக்கன்றென்பது.

'வாழ்த்து' என்பது - ஓரலங்காரம்; அது, முன்னர் உரைக்கப் படும்.

'நாற்பொருள் பயக்கும் நடை நெறித்து ஆகி' என்றது - அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையும் பயக்கும் ஒழுகலாறுடைத்தாய் என்றவாறு. 'நாற்பொருள் பயக்கும் நடை' என்றது, அகமும் அகப்புறமும் புறமும் புறப்புறமும் பயந்த நடை யென்றுமாம்.

'தன் நிகர் இல்லா தலைவனை உடைத்தாய்' என்றது-தன்னோடு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதானை நாயகனாக வுடைத்தாய் என்றவாறு.

---

* பாவ - ஹாவ.

'பல்பொருட்கேற்பின் நல்லது கோடல்' என்றதனால், தன்னி னுயர்ந்தா ரில்லாதா னென்று கொள்ளப்பட்டதாயிற்று.

'மலை கடல் நாடு வளம் நகர் பருவம் இருசுடர்த் தோற்றம் என்று இனையன புனைந்து' என்றது - மலை வருணனையும், கடல் வருணனையும், நாட்டுவருணனையும், நகரவருணனையும், இருதுவரு ணனையும், ஆதித்தோதயவருணனையும், சந்திரோதய வருணனையும், என்று இன்னோரன்ன வருணனைகளை யுடைத்தாய் என்றவாறு.

'நல் மணம் புணர்தல், பொன் முடி கவித்தல், பூம் பொழில் நுகர்தல், புனல் விளையாடல், தேம்பிழி மதுக்களி, சிறுவரைப் பெறு தல், புலவியிற் புலத்தல், கலவியிற் களித்தல் என்று இன்னன புனை ந்த நல் நடைத்து ஆகி' என்றது - இன்னோரன்ன செய்கைச் சிறப் புப் புகழ்ந்து தொடுக்கப்பட்ட நல்லொழுக்க முடைத்தாய் என்ற வாறு. 'இன்னன' என்றதனால், பலவருணனைகளையு முடைத்தாய் வருவதெனக் கொள்க.

'மந்திரம் தூது செலவு இகல் வென்றி சந்தியின் தொடர்ந்து' என்றது-மந்திரமிருத்தலும், தூதுவிடுதலும், மேற்செலவும், செருச் செய்கையும், வென்றியெய்தலும் சந்திபோலத் தொடர்புபட்டு என்ற வாறு. 'சந்தி' என்பது நாடகத்தே நிலைபெறுதலான், ஈண்டு, அது போலவெனக் கூறப்பட்டது; அவையாவன-வித்து, முளை, தழைத் தல், விளைவு துய்த்தல் என இவை போல்வன.

'சருக்கம் இலம்பகம் பரிச்சேதம் என்னும் பான்மையின் விள ங்கி' என்றது - சருக்கமென்றூதல் இலம்பகமென்றூதல் பரிச்சேத மென்றூதல் பாகுபாட்டால் விளக்கமுடைத்தாய் என்றவாறு.

'நெருங்கிய சுவையும் பாவமும் விரும்ப' என்றது - எட்டு வகைப்பட்ட சுவையும் மெய்ப்பாட்டுக் குறிப்பும் இடைவிடாமற் கேட்போர் மதிப்ப என்றவாறு.

'கற்றோர் புனையும் பெற்றியது என்ப' என்றது - இவ்வகைத் தாகப் புலவராற் புனையப்படுந் தன்மையை யுடைத்து என்பர் ஆசிரி யர் என்றவாறு. (அ)

## பெருங்காப்பியவிலக்கணத்திற்கு ஓர் புறனடை

9. கூறிய வுறுப்பிற் சிலகுறைந் தியலினும்
வேறுபா டின்றெனன விளம்பினர் புலவர்.

என்பது, மேலதற்கு ஓர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற் சொல்லப்பட்ட வுறுப்பிற் சில குறைந்துவரி னும் பெருங்காப்பியத்திற் பிறிதன்றென விளம்பினர் அறிவுடை யோர். (கூ)

## காப்பியம்

10. அறமுத னான்கினுங் குறைபா டுடையது
காப்பிய மென்று கருதப் படுமே.

என்பது, காப்பியமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினுள் ஒன்றும் பலவுங் குறைந்து வருவது, காப்பியமென்று கருதப்படுவது.

(வி-ரை.) இதனால், "கூறிய வுறுப்பிற் சிலகுறைந் தியலினும்" என்பதற்கு அறமுதல் நான்கும் ஒழித்து அல்லாத வுறுப்பிற் சில குறைவதே பெருங்காப்பியமென்று கொள்ளப்படும். இஃது 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்பது. (௧0)

## காப்பியங்கட்கு ஓர் இலக்கணம்

11. அவைதாம்,
ஒருதிறப் பாட்டினும் பலதிறப் பாட்டினும்
உரையும் * பாடையும் விரவியும் வருமே.

என்பது, அக்காப்பியங்கட்கு எய்தியதோ ரிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய பெருங்காப்பியமும் காப்பியமும் ஒருவகைச் செய்யுளானும், பலவகைச் செய்யுளானும், உரை விரவியும், * பாடை விரவியும் வருதலு முடைய.

(வி - ரை.) ஈண்டுச் 'செய்யுள்' என்பது, பாவும் இனமும் நோக்கியது. 'விரவியும் வரும்' என்ற உம்மையான் விரவாது செய்யுளான் வருவதே சிறப்புடைத்தெனக் கொள்க. (௧௧)

## சொற்றொடர்நிலைச் செய்யுள்

12. செய்யுளந் தாதி சொற்றொடர் நிலையே.

என்பது, சொற்றொடர்நிலைச் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஒருசெய்யுளின் இறுதி அடுத்த செய்யுட்கு ஆதியாகி வரத் தொடுப்பது சொற்றொடர்நிலைச் செய்யுளாம்.

(வி - ரை.) அவை, கலம்பக முதலியன. அல்லதூஉம், ஒரு செய்யுளுள்ளே ஓரடி யிறுதி மற்றையடிக்கு முதலாகத் தொடுப்பனவும் உள; அவை, முன்னர் உரைக்கப்படும்.

---

* பாடை - பாஷை.

இவற்றிற் கிலக்கியம் வந்துழிக் காண்க; ஈண்டு உரைக்கிற் பெருகும். (கஉ)

## II. செய்யுள் நெறி

13. மெய்பெறு மரபின் விரித்தசெய் யுட்கு
வைதருப் பம்மே கௌட மென்றாங்
கெய்திய நெறிதா மிருவகைப் படுமே.

என்பது, மேற்கூறிய செய்யுள்களின் நெறிக் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருள்பெறும் இலக்கண நெறியான் விரித்தோதப்பட்ட செய்யுளனைத்திற்கும் வைதருப்பமும் கௌடமும் எனப் பொருந்திய நெறி இரண்டு வகைப்படும்.

(வி-ரை.) அஃதேல், மேற்கூறிய செய்யுளனைத்தும் இருவகை நெறிப்படு மென்றமையின், ஒன்றற்கே இருவகை நெறியும் உள வென்று கொள்ளற்க; வைதருப்ப நெறியான் வருவனவும் உள, கௌடநெறியான் வருவனவும் உள, மேற்கூறிய செய்யுளனைத்தும் எனக்கொள்க. (கங)

## வைதருப்ப நெறி

14. செறிவே தெளிவே சமநிலை யின்ப
மொழுகிசை யுதார முய்த்தலில் பொருண்மை
காந்தம் வலியே சமாதி யென்றாங்
காய்ந்த வீரைங் குணனு முயிரா
வாய்ந்த வென்ப வைதருப் பம்மே.

என்பது, வைத்தமுறையானே வைதருப்பநெறியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) செறிவும், தெளிவும், சமநிலையும், இன்பமும், ஒழுகிசையும், உதாரமும், உய்த்தலில் பொருண்மையும், காந்தமும், வலியும், சமாதியும் என்று கூறப்பட்ட குற்றமற்ற குணம் பத்தும் உயிராகப் புலப்படுவது, வைதருப்ப நெறி.

'வாய்த்த' என்பது 'வாய்ந்த' என மெலிந்து நின்றது.

'உயிரா' என்பதனை உயிர்போல இன்றியமையாதனவாக எனக் கொள்க.

## கௌடநெறி

**15.** கௌட மென்பது கருதிய பத்தொடுங்
கூடா தியலுங் கொள்கைத் தென்ப.

என்பது, கௌடநெறியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கௌடநெறியென்று சொல்லப்படுவது, மேற்குறித்து உரைக்கப்பட்ட பத்துக் குணவலங்காரங்களோடுங் கூடாது நடக்கும் ஒழுக்காறுடையது.

(வி-ரை.) 'பத்தொடுங்கூடாது' என்னும் முற்றும்மையை எச்சவும்மையாக்கிச் சிலவற்றோடு கூடியும் வருமெனக் கொள்க. (கரு)

## க. செறிவு

**16** செறிவெனப் படுவது நெகிழிசை யின்மை.

என்பது, செறிவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செறிவென்று சொல்லப்படுவது, நெகிழ்ந்த இசையின்றி வரத்தொடுப்பது.

வரலாறு:— நேரிசை வெண்பா.

"சிலைவிலங்கு நீள்புருவஞ் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள்—மலைவிலங்கு
தார்மாலை மார்ப! தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போழ்து." என வரும்.

(இ - ள்.) புணர்ச்சிக்கண்ணே நின்னுடைய மார்புஞ் செறிய முயங்குங்கால் முலை சிறிது விலங்காநிற்ப அதனை நோக்கிப் பொருளாய் விற்போல வளைந்து நீண்ட புருவமானது நெற்றிமிசையேறி வளைய ஊடுந்தன்மையை யுடையாள், மாறுபா டிலங்கிய (பலவகைப்பட்ட பூவாலாக்கப்பட்ட) தாரினையும் மாலையினையுமுடைய மார்பினை யுடையாய்! (நீ வினைகருதிப் பிரியுங்கால் இவட்கு உண்டாகிய) தனிமையால் வருந் துயரம் ஆற்றுந்தன்மையளோ? இருளோடு கூடிய மாலை வந்து சேருமிடத்து.

(வி-ரை.) 'மலைவிலங்கு தார் மாலை மார்பு' என்பதற்கு-தாரும் மாலையுங் கிடக்கப்பட்ட பரப்பினை யுடைத்தாகிய மலைபோன்ற மார்பனெனினும் அமையும்.

இனி, 'நெகிழிசை' என்பது - வல்லினம் விரவாது ஓரினத்தெழுத்தானே நெகிழத் தொடுப்பது.

வரலாறு:— நேரிசை வேண்பா.

"விரவலராய் வாழ்வாரை வெல்வா யொழிவா
யிரவுலவா வேலை யொலியே!—வரவொழிவா
யாயர்வா யேயரிவை யாருயிரை யீராவோ
வாயர்வாய் வேயோ வழல்." என வரும்,

(இ-ள்.) தமியராய் உயிரோடுகூடி வாழ்வாரை வருத்துவாய், வருத்தா தொழிவாய்; இரவின்கண்ணும் குறையாதே அரவஞ்செய்கின்ற கடலொலியே! இவளுடைய ஆருயிரைத் தாயராயுள்ளாருடைய வாயிலுண்டாகிய வசையே அறுக்குந் தன்மைத்தாயிருக்க, (அதன்மேலும்) இடைக்குலமாக்கள் வாயிலுண்டாகிய வேய்விளையிசையும் அழலைக் கொடாநின்றது. அதனு லிப்பொழுது இவளைக் கருதி வருகின்ற வரவை யொழிவாயாக.

(வி-ரை.) இவ்வாறு ஓரினத்தெழுத்தால் தொடுக்கப்படுவதோர் சுவை நோக்கிக் கௌடநெறியார் விரும்புவர். இஃதிரண்டு நெறியார்க்கு மொக்கும். (கசு)

## உ. தெளிவு

**17**. தெளிவெனப் படுவது பொருள்புலப் பாடே.

என்பது, தெளிவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தெளிவென்று சொல்லப்படுவது, கவியாற் கருதப்பட்டபொருள், கேட்போர்க்கு உளங்கொண்டு விளங்கத்தோன்றுவது.

(திருக்குறள் ௩௨-ம் அதி. இன்னுசெய்யாமை, ௯-ம் பாடல்.)

குறள் வேண்பா.

"பிறர்க்கின்னு முற்பகற் செய்யிற் றமக்கின்னு
பிற்பகற் றாமே வரும்." என வரும்,

இவ்வாறு தொடுத்தாற் கவியருமையும் நோக்குடைப் பொருள்கோளு மின்றித் தோன்றுமென இந்நெறி விரும்பாது கௌடர் சொல்லுமாறு:—

(திருக்குறள் ௩0-ம் அதி. வாய்மை, எ-ம் பாடல்.)

குறள் வேண்பா.

"பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று." என வரும்.

## ௩. சமநிலை

**18.** விரவத் தொடுப்பது சமநிலை யாகும்.

என்பது: சமநிலையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வன்மை மென்மை இடைமை என்னும் மூவினமும் தம்முள் விரவத் தொடுப்பது சமநிலையாம்.

வரலாறு:— கட்டளைக்கலித்துறை.

"சோக மெவண்கொ லிதழிபொன் றூக்கின சோர்குழலாய் !
மேக முழங்க விரைசூழ் தளவங் கொடியெடுப்ப
மாக நெருங்கவண் டானங் களிவண்டு பாடவெங்குந்
தோகை நடஞ்செயு மன்பர்தந் தேரினித் தோன்றியதே."

என வரும்.

(இ-ள்.) நான்ற குழலினையுடையாய்! கொன்றைகளானவை பொன்மாலை நாற்ற, ஆகாச நெருங்க, மேகங்கள் முழவென முழங்கா நிற்ப, விரையுடைய மலரோடு கூடிய முல்லைபலவும் கொடியெடா நின்றன; அழகிய தானத்திலே வண்டுகள் களித்துப் பாட, எப்பக்கமும் மயில்கள் ஆடாநின்றன; இதனாலே, இப்பொழுதே நம்முடைய தலைவரேறிய தேர் வந்து அவரோடு தோன்றுவதா யிருந்தது; அதனாலே, நின்னுடைய வருத்தம் எங்கே போகக்கடவது?

(வி - ரை.) 'சோகமெவன்கொல்' என்பதற்குச் சோகமென்னென நிறுத்தி வினவாக்குவாறுமுளர்.

இனிக் கௌடநெறி வருமாறு:—

கட்டளைக்கலித்துறை.

"இடர்த்திறத் தைத்துற பொற்றொடி! நீயிடித் துத்தடித்துச்
சுடர்க்கொடித் திக்கனைத் திற்றடு மாறத் துளிக்குமைக்கார்
மடக்குயிற் கொத்தொளிக் கக்களிக் கப்புக்க தோகைவெற்றிக்
கடற்படைக்கொற்றவன் பொற்கொடித் தேரினிக் கண்ணுற்றதே."

(இ - ள்.) பொன்னாற் செய்யப்பட்ட தொடியினையுடையாய்! இருண்ட நிறத்தையுடைய மேகமானது, முழங்குவதுஞ் செய்து, மின்னுகிய ஒளியோடுங் கூடிய வொழுங்கு பலதிக்கினுந் தோற்றி நடுங்க, மழையைத் தாாநின்றது; அதுவேயுமன்றி மடப்பத்தையுடைய குயிற்றிரள் ஒளிக்க, களிக்கத் தொடங்காநின்றன மயில்களானவை; ஆதலால், வெற்றிகொண்ட கடல்போன்ற பெரிய தானையையுடைய தலைவனேறிய பொற்கொடியையுடைய தேரானது

இப்பொழுதே வந்து நம்மைச் சேர்வதாயிருந்தது; நீ வருத்தம் ஒழிவா யாக.

இச்சூத்திரங் கூறுக்கால், மேல் 'செறிவு' என்று கூறியவத ஞனே நெகிழத் தொடாமையே யன்றி வற்கெனத் தொடுப்பினும் செறிவென்று வைதர்ப்பர்க்கும் கொள்ளக்கிடக்கும். (கஅ)

## ச. இன்பம்

**19.** சொல்லினும் பொருளினுஞ் சுவைபட லின்பம்.

என்பது, இன்பமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சொல்லினுற் சுவைபடத் தொடுத்தலும், பொருளி னுற் சுவைபடத் தொடுத்தலும் இன்பமாம்.

(வி-ரை.) அவற்றுள், சொற்காரணமாகிய இன்பமாவது-வழி மோனை முதலாக வரத்தொடுப்பது.

வரலாறு:—

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

"முன்னைத்தஞ் சிற்றின் முழங்கு கடலோத மூழ்கிப் போக
அன்னைக்கு ரைப்ப னறிவாய் கடலேயென் றலறிப் பேருந்
தன்மைமட வார்தளர்ந் துகுத்த வெண்முத்தந் தயங்கு கானற்
புன்னையரும் பேய்ப்பப் போவாரைப் பேதுறுக்கும்
புகாரே யெம்மூர்."

என வரும்.

(இ - ள்.) முன்பு தம்முடைய சிறு வீடானது ஒலிக்கின்ற கடல் வெள்ளத்தில் மூழ்கிப்போக, (அதைக் கண்டு 'என்னுடைய) அன்னைக்குச் சொல்லுவேன், கடலே! அறிவாயாக' என்று அலறி யோடுகின்ற தன்மையினையுடைய பெண்கள் கானலின்கண் வருந்தி அறுத்துச் சிதறிய வெண்மையான முத்தம் பிரகாசிக்கின்ற புன்னை யரும்பை யொப்பாக (ஆண்டு)ப் போவாரை மயங்கச் செய்கின்ற காவிரிப்பூம்பட்டினமே எம்மூர்.

இத்துணைச் சுருங்கத் தொடுப்பது இன்றென்று கௌடர் சொல்லுமாறு:—

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

"துணைவருநீர் துடைப்பவராய்த் துவள்கின்றேன் றுணைவிழிசேர்
துயிலை நீக்கி

யினவளைபோ லின்னலஞ்சோர்ந் திடருழப்ப விகந்தவர்நாட்
டில்லை போலுந்
தனியவர்க டளர்வெய்தத் தடங்கமலந் தளையவிழ்க்குந்
தருண வேனிற்
பனிமதுவின் பசுந்தாது பைம்பொழிலிற் பரப்பிவரும்
பருவத் தென்றல்.''

என வரும்.

(இ - ள்.) (துயரமிகுதியாலே என் கண்ணினிடத்து) விரைந்து இழிதரு நீரை மாற்றினராய், வருந்தும் என்னுடைய இணை விழியானவை இமைபொருந்துந் தன்மைத்தாகிய உறக்கத்தை நீக்கி(க் காத்தின்கண்) இனமாக இடப்பட்ட வளை (சோர்தல்) போல இனிய அழகு குறைந்து யான் துயருறும்வண்ணம் பிரிந்து போனவருடைய நாட்டின்கண், பிரிந்திருந்தோர் நடுக்க மெய்தப் பெரிதாகிய பொய்கையி னுண்டாகிய தாமரையின் கட்டை விடுவிக்கும் இளவேனிலும், (அக்காலத்தி லுண்டாகிய) குளிர்ந்த தேனையும் பசிய தாதுக்களையும் பசுமையான சோலையின்கண் பரப்பி வருகின்ற இளந்தென்றலும் இல்லையோ? (சொல்வாயாக, தோழீ!)

இனி, பொருள்காரணமாகிய இன்பமாவது: மதுகாரணமாக மதுகரங்கட்கு வரும் மகிழ்ச்சிபோலக் கவிகேட்போருக்கு வரும் இன்பமாம்.

வரலாறு:—

ஆசிரியப்பா

''மானேர் நோக்கின் வளைக்கை யாய்ச்சியர்
கான முல்லை சூடார் கதுப்பிற்
பூவைப் புதுமலர் சூடித் தாந்த
மடங்காப் பணைமுலை யிழைவளர் முற்றத்துச்
சுணங்கின் செவ்வி மறைப்பினு மலர்ந்த
பூவைப் புதுமலர் பரப்புவர் பூவயி
ஞனிரை வருத்தம் வீடமலை யெடுத்து
மாரி காத்த காளை
நீல மேனி நிகர்க்குமா லெனவே.'' எனவும்,

''முற்றிழை மகளிர் முலைமுக டுழக்கவும்
பொற்றொடிப் புதல்வ ரோடி யாடவுஞ்
செஞ்சாந்து சிதைந்த மார்பி ளொண்பூ
ணரிமா வன்ன வணங்குடைத் துப்பிற்

திருமால் வளவன் றெவ்வர்க் கோச்சிய
வேலினும் வெய்ய கண்ணவன்
கோலினுந் தண்ணிய தடமென் றோளே.''

எனவும் வரும்.

இப்பொருள் காரணமாகிய இன்பம் இரண்டு நெறியார்க்கும் ஒக்கும்.

இவ்வாறு தொடுக்குங்கால், கிராமியச்சொல்லும் பொருளும், இடர்க்கச்சொல்லும் பொருளுந் தீண்டாமற் பாடுவது. (கக)

## ரு. ஒழுகிசை

**20.** ஒழுகிசை யென்பது வெறுத்திசை யின்மை.

என்பது, ஒழுகிசையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒழுகிசையென்று சொல்லப்படுவது, வெறுக்கத் தரும் இன்னாவிசை யின்றி வரத் தொடுப்பது.

வரலாறு:—

நேரிசை வெண்பா

''இமையவர்கண் மோலி யிணைமலர்த்தாள் சூடச்
சமையந் தொறுநின்ற தையல்—சிமைய
மலைமடந்தை வாச மலர்மடந்தை யெண்ணெண்
கலைமடந்தை நாவலோர் கண்.''

என வரும்.

(இ - ள்.) துணையாகிய மலர்போன்ற சீர்பாதத்தைத் தேவர்க ளெல்லாரும் (தங்கள்) முடிமேலே சூடும்வண்ணம் பலவகைப்பட்ட சமயங்கடோறும் புக்குநின்ற மடவாள், சிகரங்களையுடைய மலையா யன் மகளுமாய், நறுநாற்றத்தை யுடைத்தாகிய தாமரைமலர்மீது இருந்த சீதேவியுமாய், பலவகைப்பட்ட கலைகளுக்கு இறைவியுமாய் நின்ற சரசுவதி: அவள் நாவினால் வலியோர்க்குக் கண்ணாயிருப்பவள்.

(வி - ரை.) மலைமடந்தை - பார்வதி.

இனி, 'இன்னாவிசை' என்பது - மென்னடை யொழுக்கத்து வல்லொற் றடுத்து மிக்கதுபோலவும், அந்நடை யொழுக்கத்து உயி ரெழுத்தடுத்துப் பொய்ந்நலம்பட்டு அறுத்திசைப்பது போலவும் வரும்.

வரலாறு:—

நேரிசை வெண்பா

"ஆக்கம் புகழ்பெற்ற தாவி யிவள்பெற்றாள்
பூக்கட் குழற்கார் பொறைபெற்ற—மாக்கடல்சூழ்
மண்பெற்ற வொற்றைக் குடையாய் வரப்பெற்றெங்
கண்பெற்ற வின்று களி." என்பது.

(இ - ள்.) பெரியகடல்சூழ்ந்த உலகத்துள்ளார் தங்கள் தவப் பலனாகப் பெற்ற ஒப்பற்ற குடையையுடைய தலைவனே! (நீ எங்களை நினைத்து) வந்த இதனானே, இன்று, நின்னுடைய புகழானது பெருக்கம் பெற்றது; தலைமகளாகிய இவள் உயிர்பெற்றாள்; இவளுடைய கார்போன்ற குழலானது மதுவினை யுடைத்தாகிய பூக்களின் பாரத்தைப்பெற்றது; எங்களுடைய கண்களும் செருக்குப்பெற்றன.

இவ்வாறு வேண்டார் இரண்டு நெறியாரும். (உ0)

சூ. உ தா ர ம்

**21**. உதார மென்ப தோதிய செய்யுளிற்
குறிப்பி னொருபொரு ணெறிப்படத் தோன்றல்.

என்பது, உதாரமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உதாரமென்று சொல்லப்படுவது, சொல்லப்பட்ட செய்யுளுள் சொற்படு பொருளின்றி, அதன் குறிப்பினால் ஒரு பொருள் நெறிப்படத் தோன்றுவது.

வரலாறு:—

நேரிசை வெண்பா

"செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம்
பெருமான் முகம்பார்த்த பின்ன—ரொருநாளும்
பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற் பாராவாங்
காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்."

என வரும்.

(இ - ள்.) பொருண்மேல்வைத்த அவாவினாலே தாழ்வுவைத் திரப்போர் கண்களானவை, போரின்கண் வலியுடைத்தாகிய வேலையும், சென்னி யென்னும் பெயரையு முடையனாகிய தெற்கின்கணுண்டாகிய உறந்தைப் பதியார்க்குத் தலைவனாகிய சோழனுடைய முகத்தைப் பார்த்தபின் பூமண்டலத்துள்ளார் முகங்களைப் பொருள் விருப்பினாற் பாரா.

(வி-ரை.) இதனுள் 'உறந்தையார் கோமானை ஒருநாள் முகம் பார்த்த இரவலர் பின்னைப் பிறரைப் பொருள் நசையாற் பாரார்' எனவே, அவன் இரப்போர் வறுமைதீரக் கொடுப்பான் என்னும் பொருள் குறிப்பினாற் கொள்ளக் கிடந்தவாறு காண்க.

நேரிசை வெண்பா

"அவிழ்ந்த துணியிசைக்கு மம்பலமுஞ் சீக்கு
மகிழ்ந்திடுவார் முன்னர் மலரும்—கவிழ்ந்து
நிழறுழாம் யானை நெடுந்தே ரிரவி
கழறொழா மன்னவர்தங் கை."

என்பதும் அது.

(இ - ள்.) தன்னுடைய நிழலைக் கவிழ்ந்து சிதைக்கும் யானையினையும் நெடிய தேரினையுமுடைய இரவிகுலத்துள்ளானுடைய பாதங்களைப் பணியாத அரசர்களுடைய கைகளானவை, (உடுக்க வேண்டின்) அவிழ்ந்த துணிகளைப் பின்பு முடியாநிற்கும்; (கிடக்க வேண்டின் ஊர்ப்புறத்து உண்டாகிய) அம்பலங்களைத் துடையாநிற்கும்; (உணவுவேண்டின்) இடுவார் முன்னர் (ச் சென்று நின்று) உள்ளத்து உவகையோடும் விரியாநிற்கும்.

(வி - ரை.) 'இடுவார் முன்னர் உவகையோடு விரியாநிற்கும்,' என்றதனால், இடாதார் முன்னர் உவகையின்றி விரியுமெனக் கொள்க. இவை இரண்டு நெறியார்க்கும் ஒக்கும். (உக)

## எ. உய்த்தலில் பொருண்மை

22. கருதிய பொருளைத் தெரிவுற விரித்தற்
குரியசொல் லுடைய துய்த்தலில் பொருண்மை.

என்பது: உய்த்தலில் பொருண்மை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உய்த்தலில் பொருண்மை யென்பது கவி தன்னாற் கருதப்பட்ட பொருளை விளங்க விரிக்குஞ் சொல்லைச் செய்யுளுள்ளே யுடைத்தாய்ப் பிறிதுமொழி கூட்டி யுரைக்கும் பெற்றியின்றி வரத் தொடுப்பது.

வரலாறு:—

நேரிசை வெண்பா

"இன்றுமையாண் மாசிலா வாண்முகங்கண் டேக்கற்றோ
அன்றி விடவரவை யஞ்சியோ—கொன்றை

யுளராவா ரோடு மொளிர்சடையீர் சென்னி
வளராவா றென்னோ மதி."

என வரும்.

(இ - ள்.) உமையாளுடைய குற்றமற்ற ஒளியினை யுடைத்தாகிய முக மண்டலத்தைக் கண்டு அதனுடைய நலனை ஆசைப்படுதலானோ? அஃதன்றியே, (நீர் ஆபரணமாக அணிந்த) விடத்தை யுடைத்தாகிய பாம்பினைக் கண்டு அஞ்சுதலானோ? கொன்றையின் மலர்களை யீர்த்துக்கொண்டு கங்கையாறு விரைந்து திரியும் ஒளியோடு கூடிய சடையினை யுடையீர்! இன்று உம்முடைய திருமுடிமே லுண்டாகிய பிறையானது வளராதிருந்த காரணம் யாது? (சொல்லுவீர்).

இனி உய்த்துணர்தல் வருமாறு:—

நேரிசை வெண்பா

"இன்றுமையாண் மாசிலா வாண்முகங்கண் டேக்கறுமால்
அன்றி விடவரவு மஞ்சுறையுங்—கொன்றை
யுளராவா ரோடு மொளிர்சடையீர் சென்னி
வளராவா றென்னோ மதி."

என்பதனுள் 'யாதனாலோ' என்னுஞ் சொற்கூட்டி யுரைக்கப்படும். இவ்வாறு வேண்டுவோர் இரண்டு நெறியாரும். (உஉ)

## அ. காந்தம்

**23** உலகொழுக் கிறவா துயர்புகழ் காந்தம்.

என்பது, காந்தமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) காந்தமாவது ஒன்றனை உயர்த்துப் புகழுங்கால் உலக நடை யிறவாமல் உயர்த்துப் புகழ்வது.

வரலாறு:—

நேரிசை வெண்பா

"ஒருபே ருணர்வுடனே யொண்ணிறையுந் தேய
வருமே துறவென்பால் வைத்த—வொருபேதை
போதளவு வாசப் புரிகுழல்சூழ் வாண்முகத்துக்
காதளவு நீண்டுலவுங் கண்."

என வரும்.

(இ - ள்.) யான் வருத்தத்தை யுறும் வகையாகப் பேதைத் தன்மையை யுடையா ளொருத்தி என் உள்ளத்திடத்து வைத்த

பூவொடு கலந்த நறுநாற்றத்தை யுடைத்தாகிய சுருண்ட குழலினை யுடைத்தாய் ஒளியோடு கூடிய முகத்தின்கண் உண்டாகிய காதின் எல்லை யளவுஞ் சென்று மீண்டு திரியுங் கண்களானவை, இக்காலத்து எனது ஒரு தன்மையா யிருக்கப்பட்ட அறிவுடனே ஒள்ளிதாகிய ஒழுக்கமுங் கெட வந்து தோன்றுகின்றன.

(வி - ரை.) ஒருபேதை என் உள்ளத்து வைத்த கண் என்று கூட்டுக.

இனி, கௌடநெறி வருமாறு:—

வரலாறு:—

நேரிசை வெண்பா

"ஐயோ வகலல்குல் சூழ்வருதற் காழித்தேர்
வெய்யோற் கனேகநாள் வேண்டுமால்—கைபரந்து
வண்டிசைக்குங் கூந்தன் மதர்விழிகள் சென்றுலவ
எண்டிசைக்கும் போதா திடம்" என்பது.

(இ-ள்.) திரளாகப் பரந்து வண்டுகள் பாடப்பட்ட கூந்தலினை யுடையாளுடைய அகன்ற அல்குற்பரப்பைச் சூழ்வருதற்கு, ஐயோ! ஆகாயப்பரப்பெல்லாம் ஒரு பொழுதிற் கடக்கும் ஒருகாற் றேரை யுடைய பகலோனுக்குப் பன்னெடுநாள் வேண்டுவதா யிருந்தது; அதுவேயன்றி, இவளுடைய களிப்பையுடைத்தாகிய கண்கள் சென்று மீண்டு உலாவுவதற்கு எண்வகைப்பட்ட திக்குக்களுக்கு உண்டாகிய இடப்பரப்பும் போதாததா யிருந்தது.

(வி-ரை.) 'ஐயோ' என்பது இரக்கத்தின்கட்குறிப்பு; இவ்விரக்கம் ஆதித்தன்மே லேற்றுக.

நேரிசை வெண்பா

"அங்கண்மா ஞாலத் தகல்விசும்பை முன்படைத்த
பங்கயத்தோ னந்நாளிப் பைந்தொடிதன்—கொங்கைத்
தடம்பெருக வோங்குமெனத் தானினையா வாறே
இடம்பெருகச் செய்யா வியல்பு." என்பது.

(இ - ள்.) அழகினை யுடைத்தாகிய இடத்தை யுடைத்தாய்ப் பெரிதாகிய உலகத்தின்மீது உண்டாகிய அகன்ற விசும்பை முன்பு படைத்த நான்முகன் அந் நாளில் இவ் வாகாயத்தை இடப்பரப் புண்டாகப் படையாத காரணம், பசும்பொன்னாற் செய்த தொடியினை யுடையாளுடைய முலைகள் புடைபரக்க வளர்ந்து மீதுயர்ந் தோங்குமென நினையாதவாறே? (சொல்லுவீர்).

இவ்வாறு உலகநடை யிறப்பப் புணர்ப்பதே சுவையுடையதென வேண்டுவர் கௌடர். (உ௩)

## ௬. வலி

**24.** வலியெனப் படுவது தொகைமிக வருதல்.

என்பது, வலியென்னு மலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வலியென்று சொல்லப்படுவது, தொகைச்சொற் றொடர்பு உண்டாகத் தொடுப்பது.

(வி-ரை.) 'மிக' என்றது சிறப்புடையவர்க்க் வெனக் கொள்க.

வரலாறு:—

நேரிசை வெண்பா

"கானிமிர்த்தாற் கண்பரிப வல்லியோ புல்லாதார்
மானனையார் மங்கலநா ணல்லவோ—தான
மழைத்தடக்கை வார்கழற்கான் மானவேற் கிள்ளி
புழைத்தடக்கை நால்வாய்ப் பொருப்பு." என்பது.

(இ - ள்.) காலம் வரையாது உபகரிக்கின்ற மேகம்போன்ற பெரிய கையினையும், நீண்டிருக்கின்ற கழலோடு கூடிய காலினையும், வலிதாகிய வேலினையு முடையனாகிய சோழனுடைய, துளையை யுடைத்தாகிய பெரிய கையினையும், நான்ற வாயினையுமுடைய மலையாகிய வாரணம், தன்னுடைய தாளை வலித்தால், அறுந்தன்மையை யுடையன, நிகளத்தின் கண்ணேயோ, பகைத்த வேந்தருடைய உரிமைச் சுற்றத்து மான்போன்ற விழியினையுடையார் கழுத்தில் நல்ல நாளிற் பூட்டிய வலியை யுடைத்தாகிய மங்கலக் கயிறல்லவோ?

இத்துணைச் சுருங்கத் தொடுத்தல் இன்றுதென்று கௌடர் சொல்லுமாறு:—

வரலாறு:—

நேரிசை வெண்பா

"செங்கலசக் கொங்கைச் செறிகுறங்கிற் சிறடிப்பேர்ப்
பொங்கரவ வல்குற் பொருகயற்கட்—செங்கனிவாய்க்
காருருவக் கூந்தற் கதிர்வளைக்கைக் காரிகைத்தா
மோருருவென் னுள்ளத்தே யுண்டு." என்பது.

(இ - ள்.) செம்மை நிறத்தை யுடைத்தாகிய கலசம்போன்ற முலையினையும், செறிந்த குறங்கினையும், சிறிதாகிய அடியினையும், பெரிதாகிய பாம்பின்படம்போன்ற அல்குலினையும், பகைத்தெதிர்ந்த

கயலையொத்த கண்ணிணையும், செம்மையாகிய கொவ்வைக் கனி போன்ற வாயினையும், கருமையாகிய நிறத்தினையுடைய கூந்தலினையும், ஒளியோடு கூடிய வளைகளை யுடைத்தாகிய கையினையும், அழகினையு முடைத்தா யிருப்பதோர் வடிவம் என் உள்ளம் விட்டு அகலாது. (உச)

## கo. சமாதி

**25.** உரியபொரு ளன்றி யொப்புடைப் பொருண்மேற்
றரும்வினை புணர்ப்பது சமாதி யாகும்.

என்பது, சமாதியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) முக்கியப்பொருளின் வினையை ஒப்புடைப் பொருண்மேல் தந்து புணர்த்து உரைப்பது, சமாதியென்னும் அலங்காரமாம்.

(வி-ரை.) 'சமாதி' என்னுது 'ஆகும்' என்றதனாற் பெயரும் அவ்வாறு உரைக்கப்படும்.

வரலாறு:—

ஆசிரியப்பா

"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி." எனவும்,

"விழித்த குவளைக் கழிப்போது வாக்கிய
கள்ளுண்டு களித்த வண்டினம்." எனவும்,

"கன்னியெயில்," "குமரிஞாழல்" எனவும்,

நேரிசை வெண்பா

"கடுங்கை வயலுழவர் காலைத் தடிய
மடங்கி யரியுண்ட நீலந்—தடஞ்சேர்ந்து
நீளரிமேற் கண்படுக்கு நீணீ ரவந்தியார்
கோளரியே றிங்கிருந்த கோ."

எனவும் வரும்.

இஃது, இரண்டு நெறியார்க்கும் ஒக்கும்.

இவற்றைக் குணவலங்காரமென்றுங் கூறுப.

அஃதேல், இன்னவிலக்கணமெல்லாம் முன்னையோர் மொழிந்தது, நடைபலபயின்ற வடமொழிக்கன்றே; செந்தமிழ் மொழியின் வந்தவாறுஎன்னை? எனின்,—இதன் முதனூல் செய்த ஆசிரியர் உல

கத்துச் சொல்லெல்லாம் சமஸ்கிருதம், பிராகிருதம் அவப்பிரஞ்சம் என மூன்றுவகைப்படுத்தினர். அவற்றுள், சமஸ்கிருதம் புத்தேளிர் மொழியெனவும், அவப்பிரஞ்சம் இதர சாதிகளாகிய இழிசனர் மொழி எனவுங் கூறினர். அதனால், பிராகிருதம் எல்லாநாட்டு மொழி யெனவும் படும். அல்லதூஉம், பிரகிருதி யென்பது இயல்பாகலான், பிராகிருதம் இயல்புமொழி.

அந்தப் பிராகிருதத்தைத் தற்பவம், தற்சமம், தேசியம் என மூன்றாக்கினர்.

அவற்றுள், தற்பவம் என்பன-ஆரியமொழி திரிந்து ஆவன; அவை பாபம் - பாவம் எனவும், 'தசரதன்செய்திய பிணமரு ளொன்றுள்' எனவும் வரும்.

தற்சமம் என்பன-ஆரியச்சொல்லும் தமிழ்ச்சொல்லும் பொதுவாய் வருவன; அவை-குங்குமம், மூலம், மலயமாருதம் என்பன.

தேசியம் என்பன-அவ்வந்நாட்டார் ஆட்சிச்சொல்லேயாய்ப் பிறபாடை நோக்காதன; அவை-நிலம், நீர், தீ, சோறு என்பன.

இவற்றையே செய்யுட்சொல்லெனத் தமிழ்நூலாரும் வேண்டினராகலின், இவ்வாற்றான் தமிழ்ச் சொல்லெல்லாம் பிராகிருதமெனப்படும். அச்சொற்களா லியற்றப்படும் எல்லாக் கவிக்கும் அவ்வலங்காரமனைத்தும் உரியவாகலின், ஈண்டு மொழிபெயர்த்து உரைக்கப்பட்டன. (உ௬)

## இவ்வியலுக்குப் புறனடை

ஏற்ற செய்யுட் கியன்ற வணியெலாம்
முற்ற வுணர்த்தும் பெற்றிய தருமையிற்
காட்டிய நடைநெறி கடைப்பிடித் திவற்றொடு
கூட்டி யுணர்த லான்றோர் கடனே.

என்பது, இச்சொல்லப் பட்ட அலங்காரங்கட்கெல்லா புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உலகத்து நிலைபேறுடைய செய்யுளனைத்திற்கும் பொருந்திய அணிவேறுபாடெல்லாம் ஒழிவின்றி யுணர்த்தும் பெற்றி

அரிதாகலான், காட்டப்பட்ட ஒழுக்கநெறியே பற்றுக்கோடாக இவற்ரேடுங் கூட்டிக்கொண் டுணர்தல் முற்றக் கற்ரோர் கடனும்.

(வி-ரை.) மாங்கனியும், தீம்பாலும்,வருக்கைச் சுளையும், சருக்கரையும் தம்முள் வேறுபட்ட சுவையவெனினும் கூறுவது மதுரமொன்றன்றே? அதுபோல, எழுத்துச்செறிவும், சொற்செறிவும் பொருட்செறிவும் செறிவென்றே சொல்லுவதல்லது, பிறிதொரு வகை பேசிற் பெருகிய அகலமுடைத்தாமெனக் கொள்க. ஒழிந்தனவும் அன்ன.

பொதுவியல் முற்றிற்று.



இரண்டாவது

# பொருளணியியல்

## தற்சிறப்புப்பாயிரம்

26. என்னை யுடையாள் கலைமடந்தை யெவ்வுயிர்க்கும்
அன்னை யுடைய வடித்தளிர்கள்—இன்னளிசூழ்
மென்மலர்க்கே கன்று மெனவுரைப்பர் மெய்யிலா
வன்மனத்தே தங்குமோ வந்து.

(இ- ள்.) (மிகவு மிழிவான) என்னை யடிமையாக வுடையாள் கலைமடந்தை எல்லா வுயிருக்குந் தாயாயுள்ளவளது தளிராகிய அடியிணைகளானவை, இனிதாகிய பண் முரலும் வண்டுகள் சூழ்கின்ற மிருதுவாகிய மலரின்மீது மிதிப்பினுங் கன்றுமென்று சொல்லாநிற்பர்; இத்தன்மையாகிய தளிரடிகள், உண்மையற்ற கடினமாகிய என் மனத்தின்கண் வந்து நிலையாக நிற்கும்.

(வி-ரை.) ஒகாரம்-அசை. கலைமடந்தை என்பதற்குக் கலையையூரும் வனதுர்க்கை என்பாருமுளர். (க)

## பொருளணிகள்

27. தன்மை யுவமை யுருவகந் தீவகம்
பின்வரு நிலையே முன்ன விலக்கே
வேற்றுப்பொருள் வைப்பே வேற்றுமை விபாவனை
யொட்டே யதிசயந் தற்குறிப் பேற்ற
மேது நுட்ப மிலேச நிரனிறை
யார்வ மொழிசுவை தன்மேம் பாட்டுரை
பரியா யம்மே சமாயித முதாத்த
மரிதுண ரவநுதி சிலேடை விசேட
மொப்புமைக் கூட்ட மெய்ப்படு விரோத
மாறுபடு புகழ்நிலை புகழாப் புகழ்ச்சி
நிதரிசனம் புணர்நிலை பரிவருத் தனையே

வாழ்த்தொடு சங்கீ ரணம்பா விகமிவை
* யேற்ற செய்யுட் கணியே ழைந்தே.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், பொருளானும் அணிகள தியல்புணர்த்தினமையால், பொருளணியோத் தென்னும் பெயர்த்து; அஃதேல், சொல்லா லுணர்த்தப்படும் அணி யீண்டுணர்த் திலரோ வெனின், மிகுதி பொருண்மேலதாகலான் மிக்கதனாற் பெயர் கொடுக்கப்பட்டது.

இவ்வோத்தினுள் இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், அலங்காரங்களது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தன்மையும், உவமையும், உருவகமும், தீவகமும், பின்வருநிலையும், முன்னவிலக்கும், வேற்றுப்பொருள் வைப்பும், வேற்றுமையும், விபாவனையும், ஒட்டும், அதிசயமும், தற்குறிப் பேற்றமும், ஏதுவும், நுட்பமும், இலேசமும், நிரனிறையும், ஆர்வ மொழியும், சுவையும், தன்மேம்பாட்டுரையும், பரியாயமும், சமா கிதமும், உதாத்தமும், அவநுதியும், சிலேடையும், விசேடமும், ஒப்புமைக் கூட்டமும், விரோதமும், மாறுபடு புகழ்நிலையும், புக ழாப்புகழ்ச்சியும், நிதரிசனமும், புணர்நிலையும், பரிவருத்தனையும், வாழ்த்தும், சங்கீரணமும், பாவிகமும் என இவை முப்பத்தைந்தும் மேற்கூறிய செய்யுட் கலங்காரமென்று சொல்லப்படும்.

(வி - ரை.) இவை யெல்லாம் உம்மை தொகுத்து எண்ணே கார மிடையிட்டெண்ணப்பட்டவற்றை உம்மை விரித்துரைக்கப்பட் டது. தன்மையும் உவமையுமென விரித்துக்கொள்க.

அஃதேல், இது முறையாயினவா றென்னையோவெனின், இயல்பு விகாரமென விரண்டல்லது வேறில்லை; அவற்றுள் தன்மை, இயல்பாகலான் முற்கூறப்பட்ட முறைமைத்தாய்த் தன்மையென் றுஞ் சொன்னடை யென்றுஞ் சொல்லப்படும். உவமை, விகாரமாய் மிக்க வரவிற்றாய்ப் பின்வருகின்ற பலவலங்காரங்கட் குபகார முடை த்தாகலாற் றன்மையின்பின் வைக்கப்பட்டது. ஒழிந்தனவும் வைத் தவா றுய்த்துணர்ந்துகொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும். அல்ல தூஉம் தொல்லாசிரியர் சொல்லிய நெறியெனினு மமையும்.

இனி 'ஏற்ற' என்றதனாற் சில செய்யுட்கேற்றச் சில செய்யுட் கேலாதனவு முள வொருதிறத்தணி யெனக்கொள்க.

---

* 'யேற்ற செய்யுட் கியன்ற வணியே' என்றும் பாடம்.

'அரிதுண ரவநுதி' என்று சிறப்பித்தவதனுற் சிறப்பு முத லானவற் றுண்மை மறுக்குங்கால் அம் மறையானே, ஒருபுகழ் தோன்ற வைக்கப்படு மென்பது. அஃது அதனிலக்கணங் கூறும் வழியே யுணர்ந்துகொள்க. 'மெய்ப்படு விரோதம்' என்பதற்கு மெய் யென அடை கொடுத்தது தமிழாசிரியர் முரண்டொடை யென்று தொடைப்பாற்படுத்துச் செய்யுட் குறுப்பாக்கினுர்; இவ்வாசிரிய ரதனை யலங்காரத்தின்பாற் படுத்தினுராகலி னவ்வேறுபா டறிவித் தற் கெனக்கொள்க. இவையெல்லாம் மேற்சூத்திரச் சுருக்க நோக்கி ஈண்டுரைக்கப்பட்டன.

ஒழிந்த வகல முரையிற் கொள்க. (உ)

## க. தன்மையணி

**29.** எவ்வகைப் பொருளு மெய்வகை விளக்குஞ்
சொன்முறை தொடுப்பது தன்மை யாகும்.

என்பது, நிறுத்தமுறையானே தன்மையென்னு மலங்காரத் துப் பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எவ்வகைப்பட்ட பொருளும், மெய்ம்மைக் கூறு பாட்டான் விளக்குஞ் சொன்முறையாற் பாடப்படுவது தன்மை யென்னும் அலங்காரமாம். (ங)

**30.** அதுவே,
பொருள்குணஞ் சாதி தொழிலொடு புலனும்.

என்பது, தன்மையது பகுதியாமா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அத் தன்மை பொருளும், குணமும், சாதியும், தொழிலும் என்னும் இவைபற்றித் தோன்றும்.

இவற்றுள்—க-வது, பொருட்டன்மை வருமாறு:—

நேரிசை வெண்பா

"நீல மணிமிடற்ற னீண்ட சடைமுடியன்
நூலணிந்த மார்ப னுதல்விழியன்—தோலுடையன்
கைம்மான் மறியன் கனன்மழுவன் கச்சாலை
எம்மா னிமையோர்க் கிறை." என்பது.

(இ - ள்.) கருங்குவளைபோன்ற அழகிய மிடற்றினையும், முடி யின்கண்ணே நீண்டிருக்கப்பட்ட சடையினையும், மார்பினிடத்தே

யணியப்பட்ட முப்புரி நூலினையும், நெற்றியின்கட் சேர்ந்த விழியினையும், உடையாக வசைத்ததோலினையும், கரதலத்தேந்திய மானினையும், கனல்போன்ற மழுவினையும், திருக்கச்சாலையென்னுந் திருப்பதியினையுமுடையனாய் எம்மை யாண்டுகொண்ட பெரியோன் இமையவர்க்குத் தலைவன்.

(வி - ரை.) அன் - சாரியை; நீலமணி போன்ற மிடற்றினனெனவு மமையும். மிடற்றன், சடையன், மார்பன், விழியன் எனச் செவ்வெண்ணாக்கினு மமையும். 'கனமழுவன்' எனப் பாடமோதிப் 'பெரிய மழுவினன்' என்பாருமுளர். கனலையும் மழுவையுமுடையனென்றாக்கினும் அமையும். 'கச்சாலை எம்மான்' என்றது-கச்சாலையிலே யுறையும் பெரியோனெனினு மமையும்.

உ-வது, குணத்தன்மை வருமாறு:—

நேரிசை வெண்பா

"உள்ளங் குளிர வுரோமஞ் சிலிர்த்துரையும்
தள்ளவிழி நீரரும்பத் தன்மறந்தாள்—புள்ளலைக்கும்
தேந்தா மரைவயல்சூழ் தில்லைத் திருநடஞ்செய்
பூந்தா மரைதொழுத பொன்." என்பது.

(இ - ள்.) நெஞ்சமானது குளிர மெய்ம்மயி ரரும்பி மாற்றமுந் தளரக் கண்ணிலே புனல் தோன்றத் தன்னுருவத்தையு மறந்தாள். புட்குலம் அலைக்காநின்ற மதுநிறைந்த தாமரையையுடைய பழனஞ் சூழ்ந்த தில்லைப்பொதுவின்கண்ணே அழகுடைத்தாகிய கூத்தை யாடுகின்ற (சபாபதியின்) பொலிவினையுடைய (திருவடித்) தாமரையை வணங்கின பொன்னை யொப்பாள்.

(வி-ரை.) 'உரையுந்தள்ள' என்னு மும்மையால் நாணம், மடம், அச்சம், பயிர்ப்புந் தளர வெனக்கொள்க.

உ-வது, சாதித்தன்மை வருமாறு:—

நேரிசை வெண்பா

"பத்தித் தகட்ட கறைமிடற்ற பைவிரியும்
துத்திக் கவைநாத் துளையெயிற்ற—மெய்த்தவத்தோர்
ஆகத்தா னம்பலத்தா னாரா வமுதனங்கின்
பாகத்தான் சாத்தும் பணி." என்பது.

(இ - ள்.) பத்தியாகிய வரைகள் பொருந்திய வயிற்றினையுடையனவாய்க் கருமையாகிய மிடற்றினை யுடையனவாய்ப் படத்தின்கண்

பொறி நிறத்தையும், இரண்டு பிரிவான நாவையும், புரையை யுடைய பல்லினையு முடையனவா யிருப்பன: மெய்யாகிய தவத் தினை யுடையோர் அகத்தின்கண் ணுள்ளான், அம்பலத்திலே நிற் பான், பருகாத அமுதமன்ன உமாதேவியின் பாகத்தை யுடையான் சாத்தும் பணிகள்.

(வி-ரை.) பத்தித்த - அகட்ட - என்பது பத்தித்தகட்டவென விகாரமாயிற்று. அகத்தானென்பது ஆகத்தானென முதனீண்டது.

ச-வது, தொழிற்றன்மை வருமாறு:—

நேரிசை வெண்பா

"சூழ்ந்து முரன்றணவி வாசந் துதைந்தாடித்
தாழ்ந்து மதுநுகர்ந்து தாதருந்தும்—வீழ்ந்தபெரும்
பாசத்தார் நீங்காப் பரஞ்சுடரின் பைங்கொன்றை
வாசத்தார் நீங்காத வண்டு." என்பது.

(இ - ள்.) பாசநீங்கிய முத்தர்களை விட்டு நீங்காத பரஞ்சோதி யின் வாசனையையுடைய பசுமையாகிய கொன்றைமாலையைப் பிரி யாத வண்டு சூழ்ந்து பண்ணை முரன்று சேரச்சென்று மணத்தைச் செறிந்து மீதே பறந்து விரும்பி மதுவை யுண்டு தாதைக் கோதாநிற் கும்.

ஆசிரியப்பா

"மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி
ஈன்பிணை யொழியப் போகி நோன்காழ்
இரும்புதலை யார்த்த திருந்துகணை விழுக்கோ
லுளிவாய்ச் சுரையின் மிளிர மண்டி
விடுநிலக் கரம்பைப் படுநீ றாடி
நுண்புல் லடக்கிய வெண்பல் லெயிற்றியர்
பார்வை யார்த்த பறைதாள் விளவின்
நீழன் முற்றி னிலவுரற் பெய்து."

என்பதுமது.

(வி - ரை.) இஃது இலக்கியத்திற் சிறுபான்மை இலக்கணத் துள்ளே பயின்று வருவதெனக் கொள்க. (ச)

## ௨. உவமையணி.

31. பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றி
னொன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்த்
தொப்புமை தோன்றச் செப்புவ துவமை.

